உ

ஸ்ரீ கணபதிக்கு வணக்கம்
திருச்சிற்றம்பலம்
சிவமயம்

# திருமுறைச்சிறப்பு

இது
ஸ்ரீலஸ்ரீ செப்பறைச் சுவாமிகளின் மாணவரும்
பரங்கிப்பேட்டை போர்டு உயர்தரக் கலாசாலைத்
தலைமைத் தமிழாசிரியருமாகிய
**வித்துவான்-S. பெரியசாமிப் பிள்ளை அவர்களால்**
இயற்றப்பெற்று,

**திருவாளர் - R. சுப்பிரமணியப்பிள்ளையவர்களின்**
**அறுபதாவதாண்டு நிறைவு விழாவின்**
**நினைவு மலராக**
வெளியிடப்பெற்றது.

சாது அச்சுக்கூடம்
இராயப்பேட்டை, சென்னை
1943

கோயம்புத்தூர்ச் சைவத்திருவாளர் - சிவக்கவிமணி -

சி. கே. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் தந்த

## மதிப்புரை

"திருமுறைச் சிறப்பு" என்னும் பெயருடைய கட்டுரை எனது அரிய நண்பர் திரு. சா. பெரியசாமிப் பிள்ளையவர்கள் எழுதியதாகும். அவர்கள் இதனைச் சொற்பொழிவாகத் திருநாவுக்கரசு நாயனார் திருநாளின்போது திருப்புகலூரில் ஆற்றினார்கள். அப்போது நான் உடனிருந்து கேட்கும் பேறு பெற்றேன். அதனை இதுபோழ்து ஒரு நூலாக எழுதிச் சைவவுலகத்துக்கு உதவியுள்ளார்கள். திருமுறைகளின் தெய்வத் தன்மையையும், அவற்றால் உலகம் பெறும்பயனையும், இதனுள் வேத மொழிகளின் றுணைகொண்டே யாரும் மறுக்க முடியாத வண்ணம் நிலைநாட்டி யுள்ளார்கள். சைவத் தெய்வத் திருமுறைகளினும், சைவசித்தாந்த ஞான சாத்திரங்களினும் வரன்முறை பிறழாது ஆழ்ந்தகன்ற நுண்ணிய பயிற்சியும், அதற்குத் தக்க சைவ ஒழுக்கமுமுடைய ஆசிரியர் அவர்கள் தமது ஆராய்ச்சியின் பயனாகத் துணிந்து மேற்கொண்டொழுகி வரும் உயிர்க்குறுதியாகிய உண்மைகளை உலகினர்க்கும் பயன்படுமாறு வெளியிட்டது, அவர்களது பேருதவியாகும். சைவவுலகம் அவர்கட்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளது. அவர்கள் இதுபோன்ற தெய்வத்தன்மை வாய்ந்த திருப்பணிகள் பலவும் செய்து நீடு வாழுமாறு இறைவனை வணங்குகின்றேன். இந்நூல் நின்று நிலவி நற்பயன் தந்து உலவுக.

சேக்கிழார் நிலயம்
கோவை 5-2-43

C. K. சுப்பிரமணி

## உ

# உரிமையுரை

---

உலகின்கண் உளவாகிய பல்வகைப் பிறவிகளினுஞ் சிறந்ததாகிய மக்கட்பிறப்பைப் பெற்றோரனைவரும், பெறுதற்குரிய உலக இன்பமும், அதற்குச் சிறந்த சாதனங்களாகிய பொன்னும் நிலனும் முதலிய செல்வங்களும், என்றும் நிலைபேறுகிய குறையாத பேரின்பமும், அதற்குச் சாதனமாகிய மெய்யுணர்வும், ஆகிய இரண்டுவகைப் பயன்களையும், சாதனங்களையும், தரவல்லது முழுமுதற் கடவுளாகிய சிவபரம்பொருளது திருவருளேயாம். அத்திருவருளை நமக்குத் [illegible]கிற்றுவது தேவார திருவாசக முதலிய சைவத் தெய்வத் திருமுறையேயாம். காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி ஓதுபவர்களுக்குத் திருவருளைத் தந்து அத்திருவருள் வாயிலாக இருவகைப் பயன்களையும் தரவல்ல பெருஞ்சிறப்பமைந்த திருமுறையினை அனைவரும் ஓதியுணர்ந்து பெரும்பயன் பெறுதல் வேண்டும் என்னும் ஆசையால் திருமுறைச்சிறப்பு என்னும் இவ்வுரை நடையினை எழுதினேன்.



இளமையிலேயே தந்தையையிழந்த எனக்குத் தந்தையாய் நிலவி, ''சான்றோனாக்குதல் தந்தையின் கடனே'' என்பதற்கு இணங்க நன்னிலைமைக்கு வரும்வண்ணம் கல்விபயிலச்செய்து பேருதவிசெய்த பெரியார், பெருநிலக்கிழவரும், ''வேளாளனென்பான் விருந்திருக்க வுண்ணுதான்'' என்னும் முதுமொழிக்கு இலக்கியமாக விளங்கி, செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருக்கும் பேரற முடையவர்களும், சமயம், விசேடம், நிருவாணம் என்னும் மூவகைத் தீக்கைகளையும் முறையே பெற்றுச் சிவாகம விதிவழாது சிவபூசை புரிந்தவர்களும், சிவனடியார்களைச் சிவனெனவே கண்டு வழிபாடு செய்தவர்களுமாகிய ஆடூர்-சைவத்திருவாளர் - ந. கணபதிப்

பிள்ளையவர்களே யாவார்கள். அப்பெரியாரவர்களுக்கு அபிமான புத்திரராயிருந்து அவர்களைப்போலவே பேருதவிபுரிந்து எனக்குளவாகிய இன்பத்துன்பங்களைத் தமக்குளவாகக் கொண்டு ஆதரித்து வருகின்ற பெரியார், பெருநிலக்கிழவராகிய பின்னலூர்-சைவத்திருவாளர்-ரா. சுப்பிரமணியப்பிள்ளையவர்களாவார்கள். இப்பெரியாரவர்களது அறுபதாவதாண்டு நிறைவுவிழாவின் நினைவுமலராக, திருமுறைச்சிறப்பு என்னும் இவ்வுரைநடையினை உரிமையாக்குகின்றேன்.

இவ்வுரைநடையினைத் திருத்தி ஆசிவழங்கிய கோயம்புத்தூர்ச் சைவத்திருவாளர் - சிவக்கவிமணி - சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்களுக்கும்,அச்சிடுதற்குப்பலவகையானும் உதவிபுரிந்த அரியநண்பரும் திருத்துறையூர், திருநாவுக்கரசு சுவாமிகள் சைவசித்தாந்த கழகத்தை நிறுவியவருமான சைவத் திருவாளர். K. ஆறுமுகநாயனு ரவர்களுக்கும், நன்கு அச்சிட்டுதவிய சாது அச்சுக்கூடத் தலைவரவர்களுக்கும், எனது மனமார்ந்த வணக்கத்தைச் செலுத்துகின்றேன்.

குற்றங் களைந்து குணங்கொள்ளும் வண்ணம் பெரியோர்களை வேண்டுகின்றேன்.

" எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கள்
விழுமந் துடைத்தவர் நட்பு "

இங்ஙனம்

சா. பெரியசாமி

---

உ

ஸ்ரீ கணபதிக்கு வணக்கம்

திருச்சிற்றம்பலம்

சிவமயம்

# திருமுறைச்சிறப்பு

"பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கன்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி"

## (1) திருமுறை என்பதன்பொருள்

திருமுறையென்பது, திரு - முறை என்னும் இரண்டு சொற்களாலான ஒரு தொடராகும். திரு என்பது திருக்கோயில், திருநந்தனவனம், திருவிளக்கு, திருமெழுக்கு, திருவேடம், திருமடம், திருநீறு, திருத்தொண்டு, "அண்டர் அறிதற்கரிய திருவலகு" என்று இங்ஙனம் பெருவழக்காகச் சிவசம்பந்தமான பொருள்களுக்கு அடைமொழியாக வழங்கப்படுகின்றது. ஆதலால் என்றும் அழியாத்தன்மையுடைய திருவென்று பொருள்படும். முறையென்பது நூல் என்று பொருள்படும். ஆகவே அழியாத் திருவினையடைதற்குக் காரணமான நூல் என்பது இத்தொடர்மொழியின் பொருளாம்.

அழியாத்தன்மையுடைய திருவாவது "ஏகனாய் நின்றே இணையடிகள் ஒன்று உணர" (சிவஞானபோதம் - 11 - சூ.) உளதாம் சிவபோகமாம். இச்சிவபோகத்தின் சிறப்பு "பேராவொழியாப் பிரிவில்லா, மறவா நினையா அளவிலா

மாளா இன்பமா கடலே'' என்னும் திருவாசகத்தாலுணரப் படும்.

சிவபோகமாகிய அழியாத் திரு, அழியுந்தன்மையுடைய ஏனைய திருவினைப்போல எளிதில் அடைதற்குரியதன்று. சரியை கிரியை யோகங்களாகிய தவத்தைச்செய்து, அதனால் முறையே இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் நிகழப்பெற்று அப்பொழுது முதல்வன் குருவடிவங்கொண்டு எழுந்தருளி வந்து உபதேசிக்க, அவ்வுபதேசத்தால் நிகழும் சிவஞானத்தால் அடையத்தக்கதாகும். இங்ஙனம் சிவ ஞானம் பெற்றவர்களாலன்றி ஏனையோரால் அடையப் படாதென்பது, '' சென்றடையாத திருவுடையானை '' (திருஞா - சிராப்பள்ளி - பண் - குறிஞ்சி) எனவும், '' என்றும் வாராத செல்வம் வருவிப்பானை '' (புள்ளிருக்கு வேளூர் - தாண்டகம்) எனவும் வரும் தமிழ் மறைகளா லுணரப்படும்.

திருமுறை அழியாத்தன்மையுடைய சிவபோகமாகிய திருவினைப் பெறுதற்குக் காரணமாயுள்ளதென்பது '' செல் கதி காட்டிடப் போற்றும் திருவங்கமாலை '' (திருநாவுக்கரசர் புராணம் - 390) என்னும் சேக்கிழார் திருவாக்கால் நன்குணரப்படும்.

## (2) திருமுறையின் பகுப்பும் அதன் ஆசிரியர்களும்

திருமுறைகள் பன்னிரண்டு. அவற்றுள் முதல் மூன்று திருமுறைகள் (பதிகம் 384-க்குத் திருப்பாடல்கள் 4158 - திருவிடைவாய்ப்பதிகம் உள்பட) திருஞானசம்பந்த சுவாமிகளாலருளிச் செய்யப்பட்டனவாகும். நான்காந் திருமுறை முதல் ஆறுந் திருமுறை வரையிலுள்ள மூன்று திருமுறைகள் (பதிகம் 312-க்குத் திருப்பாடல்கள் 3066) திருநாவுக்கரசு சுவாமிகளால் அருளிச்செய்யப்பட்டனவாகும். ஏழாம் திருமுறை (பதிகம் 100-க்குத் திருப்பாடல்கள் 1025) சுந்தரமூர்த்தி சுவாமிகளால் அருளிச்செய்யப்பட்டதாகும்.

இவ்வேழு திருமுறைகளும் தேவாரமென்று வழங்கப்படும். திருவாசகம், திருக்கோவையார் என்னும் எட்டாந்திருமுறை (திருவாசகம் 658 திருப்பாடல்களும், திருக்கோவையார் 400 திருப்பாடல்களும்) மாணிக்கவாசக சுவாமிகளால் அருளிச் செய்யப்பட்டதாகும். திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்னும் ஒன்பதாந் திருமுறை (பதிகம் 29-க்குத் திருப்பாடல்கள் 301) திருமாளிகைத்தேவர், சேந்தனர் கருவூர்த்தேவர், பூந்துருத்திநம்பிகாடநம்பி, கண்டராதித்தர், வேணுட்டடிகள், திருவாலியமுதனர், புருடோத்தம நம்பி, சேதிராயர் என்னும் ஒன்பதின்மரால் அருளிச் செய்யப்பட்டதாகும். திருமந்திரம் என்னும் பத்தாந் திருமுறை (3069 திருப்பாடல்கள்) திருமூலரால் அருளிச் செய்யப்பட்டதாகும். பதினெராந் திருமுறையில் திருமுகப் பாசுரம் முதலிய நாற்பது நூல்களுள்ளன. 1388 பாடல்களுள்ளன. இவைகளைப் பாடியருளினவர்கள் திருவாலவாயுடையார், காரைக்காலம்மையார், ஐயடிகள்காடவர்கோன் நாயனர், சேரமான் பெருமாள் நாயனர், நக்கீரதேவ நாயனர், கல்லாட நாயனர், கபிலதேவ நாயனர், பரணதேவ நாயனர், இளம்பெருமானடிகள், அதிராவடிகள், பட்டினத்துப் பிள்ளையார், நம்பியாண்டார் நம்பிகள் என்னும் பன்னிருவராவர். திருத்தொண்டர் புராணம் பன்னிரண்டாம் திருமுறையாகும். இதனைப் பாடியருளினவர் சேக்கிழார் பெருமான். 4286 திருப்பாடல்கள் உள்ளன. ஆக இருபத்தேழு ஆசிரியர்கள் அருளிச்செய்த பன்னிரு திருமுறைகளின் திருப்பாடல்கள் 18351.

## (3) உலகுய்யப் பாடியருளப்பட்டது

உயிர்கள் பிறவியாகிய வெள்ளத்தினது கரையைக் காணுது அவ்வெள்ளத்தினுள் அழுந்தி உடலாகிய துயரத்தைத் தருகின்ற கூட்டினுள் அறிவின்றி மயங்குகின்றன. அம்மயக்கம் நீங்கி உடலாகிய கூட்டினின்றும் விடுபட்டுப்

பிறவியாகிய வெள்ளத்தைக் கடப்பதற்குப் புணையாக உள்ளது திருமுறையாகும். இத்திருமுறையைப் பெருங் கருணையையுடைய சமய குரவர்கள் முதலிய பெரியோர்கள் பாடியருளினர்கள். இங்ஙனம் உலகெலாம் உய்யும் பொருட்டுத் திருமுறைகள் பாடியருளப்பட்டனவென்பது, தம்பிரான் திருவருளால் தமிழ் மாலைகள் சாத்தும் உணர்வு உதிக்கத் திருநாவுக்கரசர்,

" நீற்று விற்றவா கியமே னியுடன்
நிறையன் புறுசிந் தையினே சமிக
மாற்றார் புரமாற் றியவே தியரை
மருளும் பிணிமா யையறுத் திடுவான்
கூற்று யினவா று விலக் ககலீ
ரென நீடிய கோதில் திருப்பதிகம்
போற்று லுலகே ழின்வருந் துயரம்
போமா றெதிர்நின் றுபுகன் றனரால் "

என்றவிடத்தில் "உலகேழின் வரும்துயரம் போமாறு எதிர் நின்று புகன்றனர்." அஃதாவது ஏழுலகத்திலும் இடை யறாது தொடர்ந்துவரும் பிறவித்துயரம் நீங்கும்பொருட்டுக் "கூற்றாயினவாறு" என்னும் முதற் குறிப்பினையுடைய பதி கத்தைப் பாடியருளினரெனவும், " மருளும்பிணி மாயை யறுத்திடுவான் " அஃதாவது மயக்கவுணர்வைத்தரும் ஆண வம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களையும் நீக்கும் பொருட்டு அருளிச் செய்தார் எனவும் சேக்கிழார் பெரு மான் அருளினமையால் பெறப்படும். " மாற்றார் புரம்மாற் றிய வேதியர் " என்றதனால் மருளும் பிணி மாயை என் பதற்கு ஆணவம், கன்மம், மாயையென்று பொருள் கொள்ளுதலே பொருத்த முடையதாகும்.

நம்பியாரூரரைத் திருவெண்ணெய் நல்லூர்ப் பெரு மான் தடுத்தாட்கொண்டு "நமக்கு அன்பிற் பெருகிய சிறப்

பின் மிக்க அர்ச்சனை பாட்டேயாகும்." ஆதலால் "நம்மைச் சொற்றமிழ் பாடுக" என்று அருளியபொழுது,

" பித்தாபிறை சூடியெனப் பெரிதாந் திருப்பதிகம்
இத்தாரணி முதலாமுல கெல்லாமுய வெடுத்தார் "

என்றவிடத்திலும் இவ்வுலக முதலாகவுள்ள எல்லாவுலகமும் உய்யும் பொருட்டு, "பித்தா பிறைசூடி" என்னும் முதற் குறிப்பினையுடைய பதிகத்தைப் பாடியருளினரென்று அருளினமையாலும் இது நன்கு துணியப்படும்.

திருஞானசம்பந்தர், தோணியப்பரருளால் ஞானப்பாலுண்டு அபரஞானம் பரஞானம் என்னும் இருவகை ஞானங்களையுமுணர்ந்து ஞானப்பால் வழிய நின்றபொழுது தாதையார், "நீ உண்டது யார் கொடுத்த பால்?" என்று வெகுண்டு வினவ, வானில் விடைமேல் பார்வதியாரோடு கருணையினால் நின்ற தோணியப்பரைச் சுட்டிக் காட்டி,

" எல்லையிலா மறைமுதன் மெய்யுடனெடுத்த எழுதுமறை
மல்லல் நெடுந்தமிழால் இம்மாநிலத்தோர்க் குரைசிறப்ப "

" செம்மைபெற எடுத்ததிருத் தோடுடைய செவியனெனும்
மெய்ம்மைமொழித் திருப்பதிகம் "

என்ற விடத்திலும், "எழுதுமறை" "மல்லல் நெடுந்தமிழால் இம்மாநிலத்தோர்க்கு உரை சிறப்ப" அஃதாவது "எழுது மறையாகிய வளப்பம் பொருந்திய தோடுடைய செவியனெனும் முதற் குறிப்பினையுடைய திருப்பதிகத்தால் இவ்வுலகினர்க்கு அபரஞானமாகிய வேதாகமங்களின் பொருள் விளங்க" எனவும், "செம்மை பெற எடுத்த திருத்தோடுடைய செவிய னெனும் மெய்ம்மை மொழித் திருப்பதிகம்" அஃதாவது பரஞானத்தாலடைதற்பாலதாகிய சிவபோகப் பெருவாழ்வை யடைதற்பொருட்டுத் "தோடுடைய செவியன்" என்னும் முதற் குறிப்பினையுடைய உண்மைப் பொருளைக் கூறும் மொழிகளையுடைய திருப்பதிகத்தைப் பாடிப், "பால் தந்தாரிவர்" என்று தாதை

யார்க்கு அறிவுறுத்தருளினார் எனவும் அருளினமையாலும் நன்கு துணியப்படும். என்றும் ஒரு பெற்றியதாதல் பற்றிச் சிவபோகம் செம்மை யென்று கூறப்பட்டது. இங்ஙனமே "உலகெலாம் உய்ய உறுதியாம் பதிகம் உரைத்து" (ஏயர்கோன் - புராணம் - 88) எனவும், "உய்வகை மண்ணுளோர்க்கு உதவிய பதிகம்" (திருஞானசம்பந்தர் புராணம்-130) எனவும், பலவிடங்களிலும் சேக்கிழார் பெருமான் கூறியருளுதலாலும் நன்கு துணியப்படும்.

இதுகாறுங் கூறியவாற்றால் தீதகன்று உலகம் உய்யத் திருவவதாரஞ் செய்த சமய குரவர்கள் உலகம் உய்யத் திருமுறைகளைப் பாடியருளினரென்பது சேக்கிழார் திருவாக்கின் றுணைகொண்டு துணியப்பட்டது.

இனி, திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையாரிடத்தில் வேதாகமங்களைக் கேட்டுணர்ந்தவரும், திருமுறைகள் வெளிவருதற்குக் காரணமாயுள்ளவரும் ஆகிய ஆசிரியர் நம்பியாண்டார் நம்பிகளும் இங்ஙனமே,

"ஆறதேறுஞ்சடையா னருள்மேவ அவனியர்க்கு
வீறதேறுந்தமி ழால்வழி கண்டவன்"

—திருஞான - சண்பை விருத்தம் - 5

அஃதாவது இவ்வுலகினர்க்குக் கங்கையைத்தரித்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருவருள் கிடைத்தற்கு நிகரற்ற திருமுறைகளாகிய தமிழால் வழி காட்டினவர் திருஞானசம்பந்தப் பெருமான் என்று அருளுதலாலும் நன்கு துணியப்படும்.

## (4) அடியவர்களால் ஓதப்படுவது

திருமுறைகள் சிவபோகமாகிய பெருந் திருவினையடைதற்குக் காரணமாக இருத்தலாலும், உலகமுய்யத் திருவவதாரஞ் செய்த சமய குரவர்களால் உலகமுய்யப் பாடப்பட்டமையாலும், அடியவர்களால் நாடோறும் ஓதியுணரப்

படும் பெருமையுடையனவாகும். இங்ஙனம் இவை அடிய வர்களால் ஓதியுணரப்படும் பெருமையுடையன வென்பது திருநாவுக்கரசர்,

''அரியானை யென்றெடுத்தே யடியவருக்குளளியானை அவர்தஞ் சிந்தை - பிரியாதபெரியதிருத் தாண்டகச் செந்தமிழ்பாடி''

என்ற விடத்தில், சேக்கிழார், தனது ஒளியால் உலகமெங் கும் வியாபித்துள்ள பொன்னம்பலத்தில் நடனம் செய்யும் கூத்தப் பிரானை, அடியவர்களது சிந்தையினின்றும் பிரி யாது என்றும் நின்று நிலவும் பெருமையுடைய அரியானை என்னும் முதற் குறிப்பினையுடைய பெரிய திருத்தாண்டகத் தைப் பாடியருளினர் என்பதனல், அரியானை என்னும் முதற் குறிப்புடைய பெரிய திருத்தாண்டகம் சிந்தையி னின்றும் பிரியாது இருக்கும் பொருட்டு அடியவர்களால் நாடோறும் இடைவிடாது ஓதப்படுகின்றதென்பது பெறப் பட்டது. இங்ஙனமே,

'' மெய்யடியார்
சித்தநிலவுந் திருத்தொண்டத் தொகைபாடிய
நம்பியைப் பணிந்து''

அஃதாவது ''பெருமிழலைக்குறும்பர் உண்மை யடியார்களது சித்தத்தில் நீங்காது நின்று நிலவும் திருத்தொண்டத் தொகையைப் பாடிய நம்பியாரூரரைப் பணிந்தார்'' என்று சேக்கிழார் கூறுதலால் சித்தத்தில் என்றும்நின்று நிலவு மாறு அடியவர்களால் நாடோறும் திருத்தொண்டத் தொகை ஓதப்படுகின்றதென்பது பெறப்பட்டது.

கூத்தப்பிரான் எளிதி னெழுந்தருளி யருளுதற்குரிய அடியவர்கள் சிந்தை யெனவும், குருவருளால் தன்னையும் தலைவனையு முணர்ந்து அடிமை பூண்ட மெய்யடியார்களது சித்தம் எனவும் கூறுதலால், திருமுறை யோதுதற்குரிய வர்களின் இயல்பும் பெறப்பட்டது. இதனல் சமயம் விசே டம் என்னுந் தீக்கைகளைப் பெற்றுச் சரியை கிரியை

யோகங்களை யனுட்டிப்போர்களே திருமுறைகளை யோது தற்குரியவரென்பதும் பெறப்பட்டது. இது "மெய்த் தவத்து நின்றோர்களுக்கு உரைசெய்து நன்பொருள் மேவிட, வைத்த சிந்தையுள் ஞானசம்பந்தன் வாய்நவின்றெழு மாலைகள்" (திருஞான - பிரமபுரம் - பண் - கொல்லி - 10) என்பதனுள் மெய்த்தவத்து நின்றோர்களுக்கு உரை செய்து என்பதனுல் நன்கு பெறப்படும்.

இங்ஙனம் மெய்யடியார்களால் ஓதப்படும் பெருமையுடைய திருமுறைகள் மெய்யடிமை பூணுதற்கு விரும்பும் எல்லோராலும் ஓதுதற்குரியன என்பதும் சொல்லாமே பெறப்படும்.

இங்ஙனம் உலகமுய்ய அருளிச்செய்த திருமுறைகளை ஓதாதொழியின், "செய்தக்க செய்யாமை யானும் கெடும்" என்பதுபற்றி ஓதாமை பெரும் பிழையாய் முடியும். ஆதலால் அடியார்கள் இவற்றை நாடோறும் ஓதி யுணரல் வேண்டும்.

## (5) தமிழ் வேதம்

"நாமொழிந்து சிவமானவா பாடித் தெள்ளேணங் கொட்டாமோ" (திருவாசகம் - தெள்ளேணம் - 4) என்பதனுல் சிவத்துவம் பெற்ற சமய குரவர்கள் நால்வரும் சிவமெனப் படுவார்கள். ஆதலால் அவர்கள்செய்யுஞ் செயலெல்லாம் சிவன் செயலேயாம். அவர்களின் கரணமெல்லாம் சிவகரணமேயாம். இது,

"பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதும்
காலனையன் றேவிக் கராங்கொண்ட—பாலன்
மரணந் தவிர்த்ததுவு மற்றவர்க்கு நந்தங்
கரணம்போ லல்லாமை காண்"

என்னும், திருக்களிற்றுப்படியாரால் நன்கு தெளியப்படும். சிவமாந் தன்மையுடைய சமயகுரவர்கள் உலகுய்ய அருளிய

திருமுறைகளும் சிவபெருமான் உலகுய்ய அருளிய வேதம் போல வேதமென்று வழங்கப்படும். இது, "தமிழ்வேதம் பாடினுர் தாளம் பெற்ருர்" (திருஞானசம்பந்தர் புராணம் - 260) எனவும், "வேதந் தமிழால் விரித்தார்" (திருஞானசம்பந்தர் புராணம் - 289) எனவும் வரும் சேக்கிழார் திருவாக்குக்களாலும்,

"எனதுரை தனதுரையாக நீறணிந்தேறுகந் தேறியஙிமலன்"
—திருஞா - இலம்பையங்கோட்டூர் - குறிஞ்சி - 1

என்று திருஞான சம்பந்தப் பெருமான் தனதுரையைச் சிவபெருமான் தன்னுரையாகக் கொண்டருளினுர் என்று கூறியருளுதலாலும் நன்கு தெளியப்படும்.

இதனுல் சமய குரவர்கள் செயலெல்லாம் சிவன் செயலாதல்பற்றி, அவர்கள் பாடிய திருமுறைகளும் வேதமெனப் படுமென்பது பெறப்பட்டது. சிவபெருமான் அருளிய வேதம் வடமொழியிலுள்ளது. சமயகுரவர்கள் அருளிய வேதம் தமிழ் மொழியிலுள்ளது. இவ்விரண்டும் மொழியால் வேறு பாடுடையனவாயினும், பொருளாலும் பயனுலும் வேறுபாடுடையனவல்ல.

ஆரிய வேதம் இயல்பாகவே வினையினின்று நீங்கி விளங்கிய அறிவினையுடைய முதல்வனுல் செய்யப்பட்டது. ஆதலின் முதனூல் எனப்படும். திருமுறைகள் முதல்வனது அருளால் பாசம் நீங்கப்பெற்று ஞானம் விளங்கிச் சர்வஞ்ஞத்துவ முதலிய எண்குணங்களும் தம்மிடம் விளங்கப் பெற்றுச் சிவமாகி நின்ற சமய குரவர்களால் செய்யப்பட்டன. ஆதலால் இவையும் முதனூல் எனப்படும். இது, "எண் குணத் துளோமே" எனவரும் திருத்தாண்டகத்தாலும், "உண்ணிறைந்து பொழிந்தெழுந்த உயர்ஞானத் திருமொழியால்" எனவரும் சேக்கிழார் திருவாக்காலும் உணரப்படும்.

ஆரிய வேதம் இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்று நான்கு வகைப்படும். ஆயினும் அதர்வண வேதம் ஏனை மூன்று வேதத்தினும் அடங்கும் என்னும் கருத்தால் வேதம் மூன்று என்று கொள்வர் பெரியோர். அம் மூன்ற னுள் இருக்கு வேதத்தில் " அக்னி மீளே " என்று அகரமும், யசுர் வேதத்தில் " யோநிஸ் சமுத்திரோபந்து " என்று உகர மும், சாம வேதத்தில் " சமானம் வரம் " என்று மகரமும், இங்ஙனம் மூன்று வேதங்களிலும் பிரணவ அக்கரங்கள் மூன்றும் வருதலின் வேதங்களெல்லாம் ஓம் என்னும் பிரண வத்தையே தமக்குப் பொருளாகவுடையனவென்பர்.

பாசம் அனைத்தையும் அழித்தலால் அரனெனவும், எங் கும் வியாபித்திருத்தலால் விஷ்ணு எனவும், எல்லாவற்றை யும் ஒருங்கே யறிதலால் பகவான் எனவும், காத்தலால் ஓம் எனவும் நாமங்கள் சிவனுக்கு உளவாயின என்று கூர்ம புராணங் கூறுதலால், ஓம் என்னும் பிரணவத்தின் பொருள் சிவபெருமான் என்பது நன்கு பெறப்பட்டது. இதனால் எல்லா வேதங்களும் சிவபெருமானையே கூறுகின் றன என்று பெரியோர் கூறுவர்.

திருமுறைகளும் பிரணவத்தையும் பிரணவத்தின் பொருளான சிவபெருமானையுமே கூறுகின்றன. எங்ஙன மெனின் முதற்றிருமுறையின் முதற்பாவின் முதல் " தோடுடைய செவியன் " என்பதாகும். இதனுள் பிரண வத்தின் முதலெழுத்தாகிய ஓ என்னும் எழுத்து வந்துள் ளது. பன்னிரண்டாந் திருமுறையாகிய பெரியபுராணத் தின் இறுதிப்பாவின் இறுதி " உலகெலாம் " என்பதாகும். இதனுள் மகரம் வந்துள்ளது. பன்னிரு திருமுறைகளின் முதலும் ஈறும் ஓம் என்னும் பிரணவமாக முடிகின்றன. இதனால் பன்னிரு திருமுறைகளும் பிரணவத்தையே கூறு கின்றன என்பதும், அப்பிரணவத்தின் பொருளாகிய சிவ பெருமானையே கூறுகின்றன என்பதும் பெறப்பட்டன. இது " என்றுமுளதாம் உண்மைப் பரபதமும் தற்பரமும்

பரனேயன்றிப் பலரில்லை யென்று எழுதும் பனுவல்'' என்னும் திருமுறைகண்ட புராணத்தால் நன்குணரப்படும்.

பிரணவத்தின்பொருள் சிவபெருமான் என்பது, "ஊனேறு படுதலையி லுண்டியான்காண் ஓங்காரன்காண் ஊழி முதலானான்காண்'' (திருவாரூர்த் தாண்டகம் - 2) எனவும், "ஒருசுடராய் உலகேழுமானான் கண்டாய் ஓங்காரத் துட்பொருளாய் நின்றான் கண்டாய்'' (திருமழபாடித் தாண்டகம் - 10) எனவும் வரும் திருத்தாண்டகங்களாலும், "உய்யுநெறி காட்டுவித்திட் டோங்காரந் துட்பொருளை, ஐயனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே'' என்னும் திருவாசகத்தாலும் உணரப்படும்.

திருமுறைகளும் வேதமாதல் பற்றியே சிவாலயத்துள் ஓதப்பட்டு வருகின்றன என்றுணர்க.

## (6) கைகண்ட மந்திரம்

திருமுறைகள் தம்மை ஓதுகின்றவர்களுக்குப் பிறவித் துன்பத்தை நீக்கிப் பேரின்பமளித்துக் காத்தலினால் மந்திரமெனப்படும். ஓதுகின்றவர்களுக்குப் பயனை யளித்தலில் என்றும் பிறழாது நிற்றலினால் கைகண்ட மந்திரமென்று சிறப்பித்தோதப்படும். இங்ஙனம் கைகண்ட மந்திரமாதல் "கண்டபெரு மந்திரமே மூவர் பாடல்'' என்னும் திருமுறைகண்ட புராணத்தாலும்,

"பெறுபயன் மிகப்புவியு ளருளுவன பிற்றைமுறை
பெருநெறி யளிப்பன பல்பிறவியை யொழிச்சுவன
உறுதுயரழிப்பன முனுமை திருவருட்பெருக வுடையன
நதிப்பு னலினெதிர் பஃறி யுய்த்தனபுன்
நறுமுறுகுரைச் சமணை நிரைக்கழு நிறுத்தியன
நனிகத வடைத்தனது னருவிட மகற்றியன
துறுபொழின் மதிற்புறவ முதுபதும னெப்பரிய
தொழில்பல மிகுத்த விரகனகவித் தொகையே''

—திருஞானசம்பந்தர் - திருக்கலம்பகம் - 35

அஃதாவது திருஞானசம்பந்தர் பதிகங்கள் இம்மையுள் பெரும்பயன் அளிப்பன ; மறுமையில் ஞானத்தையருளி முத்தியைக் கொடுப்பன ; பிறவியை நீக்குவன; பார்வதியின் திருவருளைப் பெறுவதற்கு ஏதுவாயுள்ளன ; ஆற்றில் ஓடத்தை ஓடச்செய்தன ; சமணர்களைக் கழுவிலேற்றின ; மறைக்காட்டில் திருக்கதவை யடைத்தன ; மருகலில் வணிகனது விடத்தை நீக்கின என்று கூறும் நம்பியாண்டார் நம்பிகளது திருவாக்காலும் நன்கு தெளியப்படும்.

திருவோத்தூரில் சிவனுக்காக ஓர் அடியவர் வைத்த பனைகளெல்லாம் ஆண் பனைகளாய்க் காய்க்காதொழிந்தன; அதனையறிந்து சமணர்கள் அவ்வடியவரைப் பரிகசித்தார்கள். அவ்வடியவர் திருஞானசம்பந்தப் பெருமான் திருவோத்தூருக்கு எழுந்தருளியபொழுது அதனை விண்ணப்பிக்க, திருஞானசம்பந்தப் பெருமான் சிவபெருமானைப் பாடும்பொழுது, "குரும்பை யாண்பனை யீன்குலை யோத்தூர்" என்று பாடியருளினர். உடனே அவ்வாண் பனைகளெல்லாம் பெண்பனைகளாய்க் காய்த்து நின்றன. இதனாலும் திருமுறைகள் கைகண்ட மந்திரமாதல் நன்கு தெளியப்படும்.

இவ்வாண் பனைகளெல்லாம் பெண்பனைகளாய்க் காய்த்தமையேயன்றித் திருஞானசம்பந்தர் திருவாக்கிற் பிறந்தமையால், அப்பனைகள் தம்மைப் பந்தித்துள்ள ஆணவம் கன்மம் மாயை என்னும் மூன்று பாசங்களும் நீங்கப்பெற்று, அங்ஙனம் பாசங்கள் நீங்கினமையால் அவற்றால் வரும் பிறவியும் நீங்கப்பெற்று, அனுபவித்துக் கழித்தற்குரிய பிராரத்த வினை அனுபவித்துக் கழிந்த பின்னர்ச் சிவபெருமானது திருவடிகளை அடைந்தன. ஆதலாலும் கைகண்ட மந்திரமாதல் நன்கு துணியப்படும். பனைகள், சிவபெருமானது திருவடிகளை யடைந்தன என்பது,

"பிள்ளை யார்தந் திருவாக்கிற் பிறந்த லாலே நாலமுமுன்
புள்ளபாசம் விட்டகல ஒழியாப் பிறவி தனையொழித்துக்"

கொள்ளுநீர்மைக் காலங்கள் கழித்துச் சிவமே கூடினவால்
வள்ள லார்மற் றவரருளின் வாய்மை கூறின் வரம்பென்னும்''
—திருஞானசம்பந்தர் புராணம் - 983

எனவரும் சேக்கிழார் திருவாக்காலுணரப்படும்.

## (7) பரமனுக்குப் பேருவகையைத் தருவன

சிவபெருமான் "வேண்டுதல் வேண்டாமையிலான்" ஆதலால் விருப்பு வெறுப்பு அற்ற முதல்வனுவன். ஆயினும் உயிர்கள் உய்தற்பொருட்டுப் பூசையில் விருப்புடையனுயினன். இது "விருப்பொன் றில்லான் பூண்டனன் வேண டல் செய்யும் பூசனை புரிந்துகொள்" என்னும் சிவஞான சித்தியாற் பெறப்படும். திருமுறைகளும் "நல்லுரை ஞான சம்பந்தன், ஞானத்தமிழ் நன்குணர" என்பதனுல் ஞான நூலாகும். திருமுறையோதுதலும் இறைவனது திருவடியை அடைவிக்கும் ஞான பூசையாகும். இது "ஞான நூல்தனை யோதல் ஓதுவித்தல் நற்பொருளைக் கேட்பித்தல் தான் கேட்டல் நன்ரு, ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும் இறைவனடி யடைவிக்கும் எழில்ஞான பூசை" என்னும் சிவஞானசித்தியால் தெளியப்படும்.

திருமுறையோதுதல் சிவபெருமானுக்குப் பெரும் விருப் பத்தைத் தரக்கூடியது. ஆதலால் நாடோறும் அன்பொடும் ஓதுதல் வேண்டும். அங்ஙனம் ஓதினுல் சிவபெருமான் கருணை கூர்வர். அக்கருணையால் இம்மைப் பயனையும் மறு மைப் பயனையும் ஒருங்கே பெறலாம். திருமுறையோதுதல் சிவபெருமானுக்குப் பெருவிருப்பமென்பது, "நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக்கரசரும் பாடிய நற்றமிழ்மாலை சொல்லியவே சொல்லியேத்துகப்பானை" (சுந்தரர் - திருவலிவலம் - தக்கேசிப் பண் - 5) எனவும். "தெரிந்த நான்மறையோர்க் கிடமாய திருமிழலை, இருந்துநீர் தமிழோடு இசைகேட்கு மிச்சை

யால் காசுநித்தல் நல்கினீர் " (சுந்தரர் - வீழிமிழலை - பண் - சீகாமரம் - 8) எனவும் வரும் சுந்தரமூர்த்திகளின் திரு வாக்குகளால் நன்குணரப்படும்.

இதனால் சிவபெருமான் சாமகானத்தில் விருப்ப முடையவனாதல் போலத் திருமுறையோதுதலிலும் விருப்ப முடையவன் என்பது பெறப்பட்டது. சிவபெருமான் சாம கானத்தில் விருப்ப முடையவனென்பது, திருநாமங்களுள் ஒன்றாகிய " சாமகானப் பிரியன் " என்பதனால் உணரப் படும்.

திருமுறைகளும் சிவபெருமானுக்குச் சாமகானம் போலப் பிரியமாதல் பற்றிச் சிவாலயத்துள் பூசாகாலங் களிலும் மற்றைய காலங்களிலும் ஓதப்பெறுகின்றன.

## (8) திருமுறைப்பயன்

திருமுறை யோதுதலின்பயன் முன்னர் இயைபுபற்றித் தொகுத்து ஓதப்படினும், ஈண்டு விரித்து ஓதப்படுகின்றது. பிறவித் துன்பத்தினின்றும் நீங்கி இறைவன் திருவடியை அடைதற்குச் சிறந்த சாதனம் சிவஞானமாகும். இது,

" ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராணம்
நல்ல ஆகமஞ் சொல்ல "

எனவும்,

" இறைவனடி ஞானமே ஞான மென்பார் "

எனவும் வரும் சிவஞான சித்தியுள் நான்மறைகளும் சிவாக மங்களும் புராணங்களும் ஞானத்தாலே வீடு உண்டாம் என்று கூறுகின்றன என்பதனாலும், வீடு அடைதற்குச் சாதனமானஞானம், திருவடிஞானம் என்பதனாலும் நன்கு உணரப்படும். சிவஞானம் திருவடிஞானமென்றும் வழங்கப்படும்.

திருவடிப் பேற்றிற்குச் சிறந்த சாதனமாகிய சிவ ஞானம் திருமுறையோதுதலால் உளதாகும். இது,

" திருஞான சம்பந் தனசெந் தமிழ்கள்
உருஞான முண்டாம் உணர்ந்தார் தமக்கே"
—திருஞா - திருவழுந்தூர் - இந்தளம் - 11

அஃதாவது, திருஞான சம்பந்தருடைய திருமுறைகளாய செந்தமிழ் மாலைகளை அன்பொடு ஓதியுணர வல்லவர்களுக்குச் சிவஞானம் உண்டாம் என்றருளினமையால் நன்கு துணியப்படும். உருஞானம் - சிவஞானம்.

சிவஞானம் தவத்தால் நிகழற்பாலதாம். அச்சிவ ஞானம் உளதாதற்கு ஏதுவாகிய தவமும் திருமுறைகளை ஓதுதலால் உண்டாகும். இது,

" கந்தம்மலி கமழ்காழியுட் கலைஞான சம்பந்தன்
சந்தம்மலி பாடல்சொலி ஆடத் தவமாமே"
—திருஞா - திருப்புள்ள மங்கை - நட்டபாடை - 11

என்பதனுள் பாடல் சொல்லி ஆடத்தவமாம் என்று அருளினமையாலும் பெறப்படும். ஓதுதலும் ஒருதரம் இரு தரமன்றிப் பலதரம் ஓதுதல் வேண்டும். இது,

" நன்சொலினாற் பரவும் ஞானசம்பந்தன் நல்ல
ஒண்சொலின் இவைமாலை யுருவெணத் தவமாமே"
—திருஞா - பருப்பதம் - வியாழக்குறிஞ்சி - 11

என்பதனுள் உருவெண்ண என்பதனால் பெறப்படும். உரு என்னுதல் - பலமுறையும் ஓதியுணர்தல்.

சிவஞானம் நிகழ்தற்குத் தடையாக உள்ளது பாவ மாகும். திருமுறை யோதுதல் அப்பாவத்தையும் நீக்குந் தன்மையதாகும். இது,

"நாடற் கரியசீர் ஞானசம் பந்தன்சொல்
பாடலிவை வல்லார்க் கில்லையாம் பாவமே"
—திருஞா - ஆக்கூர் - சீகாமரம் - 11

என்பதனுள் திருஞானசம்பந்தரது பாடல்களை ஓதியுணர வல்லவர்களுக்குப் பாவம் இல்லை என்றருளினமையால் நன்கு பெறப்படும்.

திருமுறை யோதுதல் இங்ஙனம் பாவத்தை நீக்கிச் சரியை, கிரியை, யோகம் என்னும் தவங்களைத் தந்து அத் தவங்கள் வாயிலாகச் சிவஞானத்தைத் தருதலேயன்றி அச் சிவஞானம் வாயிலாகத் திருவடிப் பேருகிய பரமுத்தியை யும் தரும். இது,

"கானலங் கழனி யோதம்வந் துலவுங்
கழுமல நகருறை வார்மேல்
ஞான சம்பந்தன் நற்றமிழ் மாலை
நன்மையா லுரைசெய்து நவில்வார்
ஊனசம் பந்தத் துறுபிணி நீங்கி
உள்ளமு மொருவழிக் கொண்டு
வானிடை வாழ்வார் மண்மிசைப் பிறவார்
மற்றிதற் காணையும் நமதே"
—திருஞா - கழுமலம் - புறநீர்மை - 11

என்பதனுள் பிறவிப்பிணி நீங்கி மண்மிசைப் பிறவார் என்று ஆணையிட்டுக் கூறியருளினமையால் நன்கு பெறப் படும். ஊனசம்பந்தத்து உறுபிணி - பிறவி.

ஸ்ரீ நீலகண்ட சிவாசாரியர் அக்கினி கோத்திராதி கரணத்தில் "சிவசம்பந்தமாகிய சதருத்திரீயம், அதர்வசிரசு முதலிய வேத மந்திரங்கள், பாவத்தை நீக்கி அங்ஙனம் நீக்குதலால் பரம ஞானத்துக்கு ஏதுவாகி மோக்ஷத்தை யடைதற்குச் சாதனமாயிருத்தலால், வித்துவான் அந்த

வேதாப்பியாசத்தைச் சிவபரியந்தம் அப்பியசிக்க என்று கூறியருளினமையாலும், சிவனையே தனக்குப் பொருளாக வுடைய திருமுறை யோதுதல் திருவடிப் பேற்றிற்குச் சாத னம் என்பது நன்கு தெளியப்படும்.

திருமுறை யோதுதல், பேறு எல்லாவற்றினும் சிறந்த திருவடிப்பேறாகிய சிவபோகத்தைத் தரவல்லதாயின் இம்மையில் இன்புறுதற்கு ஏதுவான பொருள், கல்வி, வீரம், புகழ், நிலம், அடிமை, கொடை, குலம் விருத்தி யாதல், எல்லாராலும் வணங்கப்படுதல் முதலியனவற்றை யும் தருமென்பது சொல்லவும் வேண்டுமோ ?

" ......தமிழ்விர கனதுரை யொருபதும்
மனமகிழ் வொடுபயில் பவர்எழின்
மலர்மகள் கலைமகள் சயமகள்
இனமலி புகழ்மகள் இசைதர
இருநில னிடையினிது அமர்வரே "

—திருஞா - திருவீழிமிழலை - திருவிராகம் - நட்டபாடை - 11

என்பதனுள் மலர்மகள், கலைமகள், சயமகள், புகழ்மகள் இசைதர என்றருளினமையால் பொருள், கல்வி, வீரம், புகழ் உளவாமென்பது பெறப்பட்டது.

"......தமிழ்விர கனதுரை நலமலி யொருபது நவில்பவர்
நிகழ்குல நிலநிறை திருவுருநிகரில கொடைமிகு சயமகள்
புகழ்புவிவளர்வழியடிமையின் மிகைபுணர்தர நலமிகுவரே"

—திருஞா - சிவபுரம் - திருவிராகம் - நட்டபாடை - 11

என்பதனுள் நிறை நிலம், நிகழ் குலம், நிகரில கொடை, வழியடிமையின் மிகைபுணர்தர என்றருளினமையால் நில மிகுதியும், குல விருத்தியும், நிகரற்ற கொடையும், வழி யடிமையும் உளவாமென்பது பெறப்பட்டது.

" ... ... தமிழ்மாலை பத்து நினைவார்
வான நிலாவ வல்லர் நிலமெங்கு
நின்று வழிபாடு செய்யு மிகவே"
—திருஞா - திருநரையூர்ச் சித்தீச்சரம் -
பண் - பியந்தைக் காந்தாரம் - 11

என்பதனுள், "நிலமெங்கு நின்று வழிபாடு செய்யும் மிகவே" என்று அருளினமையால் திருமுறை யோதுகின்றவர்களை யுலகெலாம் வழிபடுமென்பது பெறப்பட்டது.

இதுகாறுங் கூறியவாற்றால் திருமுறை யோதுதல் இம்மைப் பயனையும் மறுமைப்பயனையும் அளிக்கவல்லது என்பது நன்கு பெறப்பட்டது.

திருமுறை, தன்னை ஓதுகின்றவர்களுக்கேயன்றிக் கேட்பவர்களுக்கும் பயனளிக்கவல்லது. ஆதலால் திருமுறைகளை ஓத இயலாதார் ஓதுதலை அன்பொடுங்கேட்டல்வேண்டும். அங்ஙனம் கேட்டலால் அவர்களும் ஓதினவர் அடையும் பயனை அடைவார்கள். இது,

" ... ... ஞானசம் பந்தன் வாய்நவிற்றிய தமிழ்மாலை
ஆதரித்திசை கற்று வல்லார் சொலக்
கேட்டுகந் தவர்தம்மை
வாதி யாவினை மறுமைக்கும் இம்மைக்கும்
வருத்தம்வந் தடையாவே"
—திருஞா - வலஞ்சுழி - நட்டராகம் - 11

என்பதனுள் சொல்லக் கேட்டு மகிழ்ந்தவர்களை வினைகள் இம்மையிலும் மறுமையிலும் வாதிக்கமாட்டா. ஆதலால் அவர்களுக்குத் துன்பம் இல்லையாம் என்பதனால் நன்கு பெறப்படும்.

## (9) திருமுறை துணையாகவுள்ளது

உலகினர் தாமே ஒரு பெரிய காரியத்தைச் செய்து முடித்தல் இயலாமையால் சிறந்ததொரு துணைகொண்டு அக்காரியத்தை முடிப்பர். அதுபோலப் பிறவியாகிய பெருந்

துன்பத்தினின்றும் நீங்கித் திருவடியாகிய சிவானந்தத்தைப் பெறுதற்குச் சிறந்ததொரு துணைவேண்டும். அது திருமுறையாகும். ஆதலால் திருமுறையைத் துணையாகக் கொள்ளவேண்டும் இது,

" ... ... அதிகைவீரட் டானத்துச்
சூழுங் கழலானைச் சொன்ன தமிழ்மாலை
வாழுந் துணையாக நினைவார் வினையிலரே"

—திருஞா - திருவதிகை - பண் - தக்கராகம் - 11

என்பதனுள் சிவானந்தத்தை யடைந்து வாழ்தற்குரிய துணையாகத் திருஞானசம்பந்தரது தமிழ் மாலைகளைக் கொள்பவர்கள் துயரிலர் என்பதனுல் நன்கு பெறப்பட்டது.

தனது உண்மையை அறியமாட்டாது குருடாய்க் கிடந்த உயிருக்குப் பலவகையாலும், அவ் வுண்மையைத் தெரிவித்து எளிய அவ்வுயிரை அரிய சிவமாம் வண்ணம் செய்தருளுபவர் குரவரே யாவர். ஆதலால் குரவரே சிறந்த துணையெனப் படுவார். அதுபோலத் திருமுறையும் உயிர்களது உண்மைத் தன்மையை அறிவித்து அவ்வுயிர் சிவமாந் தன்மையை அடையுமாறு செய்யவல்லது. ஆதலால் திருமுறையும் குருவெனப்படும். திருமுறையைக் குருவாகக் கொள்பவர்கள், பிறவிப் பெருந்துயரொழிந்து திருவடிப் பேருகிய சிவானந்தத்தை யடைவார்கள். இது,

" ......உழவாரப் படைகையி லுடையான் வைத்தனதமிழ்
குருவாகக்கொடு சிவனடி சூடத் திரிபவர்
குறுகார்புக் கிடர்படு குடர்யோனிக் குழியிலே"

—திருநாவுக்கரசர் - ஏகாதசமாலை - 2

என்று நம்பியாண்டார் நம்பிகள், திருநாவுக்கரசரது திருமுறைகளைச் சிவபெருமானது திருவடிகளை யடைதற்குக் குருவாகக் கொண்டு திரிபவர்கள், பிறவியை யடையார்கள் என்று அருளினமையால் நன்கு பெறப்படும்.

## (10) ஓதுவது நமது கடமை

இம்மைப் பயனும் மறுமைப் பயனும் எளிதில் அடைதற்கு ஏதுவாகச் சமய குரவர்களால் அருளிச்செய்யப் பட்ட திருமுறையை ஓதுவது மக்களாகப் பிறந்த நம்மனோரது கடமையாம். இங்ஙனம் கடமையாதல் பற்றியே முன்னாளில் ஸ்ரீ சிவாலய முனிவர் முதலிய பல பெரியார்களும் ஓதி வந்தனர். இந்நாளிலும் கோயம்புத்தூர் - சைவத்திருவாளர் - சிவக்கவிமணி - சி. கே. சுப்பிரமணியமுதலியார் முதலிய பெரியார்களும் பன்னிரண்டுமாதங்களிலும் பன்னிரண்டு திருமுறைகளையும் ஓதி வருகின்றனர். திருமுறையோதுதல் நமது கடமையாதல்,

" ... ... ... ஞானசம் பந்தன்சொல்
நம்பர மிதுவென நாவினல் நவில்பவர்
உம்பரா ரெதிர்கொள உயர்பதி யணைவாரே "

—திருஞா - மயேந்திரப்பள்ளி - பண் - கொல்லி

என்பதனுள் நம்பரம் என்பதனல் நன்கு பெறப்படும். நம்பரம் - நமது கடமை.

"பேரனர் இடும்பை யெல்லாம் பிளந்திடும் பிறப்பு நீக்கும், ஆரமிர்து" என்று புகழ்ந்து ஓதப்படும் மக்கட் பிறப்பைப் பெற்ற நாமெல்லோரும் திருமுறைகளையோதிப் பெரும்பயனைப் பெறுவோமாக.

அந்தண் காழிப் - பந்தன் சொல்லைச்
சிந்தை செய்வோர் - உய்ந்து ளோரே.

—திருஞா - பொது - திருவிருக்குக் குறள் - பண் - கொல்லி

சீரூர் சம்பந்தன் - ஆரூ ரைச்சொன்ன
பாரூர் பாடலார் - பேரா ரின்பமே.

—திருஞா - திருவாரூர் - திருவிருக்குக் குறள் - குறிஞ்சி - 11

சுபம்

# கோவைத் தமிழ்ச்சங்க வெளியீடுகள்

---

திரு. C. K. சுப்பிரமணிய முதலியார், B. A. இயற்றியன

| | | |
|---|---|---|
| | ரூ. | அ. |
| சேக்கிழார் (16 படங்களுடன்) ... ... | 1 | 8 |
| ஸ்ரீமாணிக்கவாசகர் அல்லது சீத்தார் பெருமை—இரண்டாம் பதிப்பு (அச்சில்) ... ... ... | | |
| கருவூர்த்தேவர் ... ... ... | 0 | 8 |
| அவிநாசி கருணாம்பிகை பிள்ளைத்தமிழ் ... ... | 0 | 8 |
| திருமலைச்சருக்கம்-தில்லைவாழந்தணர் சருக்கங்களடங்கிய ஐந்து சஞ்சிகைகள் கட்டிடமான முதற்பகுதி ... | 6 | 8 |
| இலைமலிந்த சருக்கம் - மும்மையாலுலகாண்ட சருக்கங்களடங்கிய எழு சஞ்சிகைகள் கட்டிடமான இரண்டாம் பகுதி ... ... ... | 8 | 0 |
| கண்ணப்பநாயனுர்புராணம் உரையுடனும் படங்களுடனும் | 1 | 8 |
| கண்ணப்ப நாயனுர் சரிதம்—தலத் தேவாரங்கள்—படங்களுடன் ... ... ... | 0 | 4 |
| திருக்குறிப்புத்தொண்ட நாயனுர் புராணம் உரையுடனும் படங்களுடனும் ... ... ... | 1 | 0 |
| சண்டேசுரநாயனுர்புராணம் உரையுடனும் படங்களுடனும் | 0 | 8 |

---

| | | |
|---|---|---|
| சுப்பிரமணியர் திரிசதை நாமார்ச்சனை—பீசாட்சரங்களுடனும் பஞ்சாட்சர சடாட்சர மந்திரங்களுடனும் - சுப்பிரமணிய சீரித அரிய நாமாவளி—(இதுவரை வெளி வராதது; தமிழிலும் கிரந்தாட்சரத்திலும்) ... | 0 | 2 |

---

| | | |
|---|---|---|
| திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் (மூன்றும் பதிப்பு; சமாஜ வெளியீடு) ... ... | 1 | 0 |